தன் பெயரைக் குறிப்பிடாமலிருப்பதில்லை இந்நூலில் இயற்றியவரின் நாமம் காணாததற்குக் காரணங்கள் என்ன? இரண்டு காரணங்கள் ஊகிக்கக் கூடியவையாகத் தோன்றுகின்றன. விஷயங்கள் எல்லாம் அநேகமாய் பிற நூல்களிலிருந்து எடுத்துத் தொகுத்திருப்பது முதலாவது. மற்றது— நூல் அநேகம் வைத்தியர்களுடைய சேர்க்கையினால் செய்யப்பட்டது. இதுவே முக்கிய காரணமாகத் தோற்றுகிறது. எவ்விதமெனில், அரசர் **ஸ்ரீ சரபேந்திரரால்** ஆயுர்வேத சாஸ்திரத்தின் வளர்ச்சிக்காக ஸ்தாபிக்கப் பட்டிருந்த **தந்வந்தரிமஹாலில்** பற்பலவித சிகித்ஸா சாலைகள், ஔஷத நிர்மாண சாலைகள், பழைய புதிய வைத்திய நூல்களைப் பரிசீலனம் செய்தல், எழுதுதல், சேகரித்தல் முதலிய எவ்வளவோ வித ஆராய்ச்சிகள் செய்யப்பட்டுக் கொண்டிருந்தனவல்லவா! அவ்வாராய்ச்சிக் கழகத்தை அலங்கரித்த அநேகப் பிராஞசாயர்களால் சேர்ந்து செய்யப்பட்ட அனந்தமான நூல்களில் இந்த ராஜம்ருகாங்கப் புஸ்தகமும் ஒன்றாக இருக்கவேண்டும்

ஸரஸ்வதிமஹாலில் தனி சொந்தப் பெயரிடப்படாமல் 'நாநாவித வைத்யகம்' என்ற தலைமையின் கீழ் தொகுக்கப்பட்டுள்ள அநேகம் புஸ்தகங்கள், மருந்து செய்முறைகள் பிரயோக விதங்கள், பிரயோகங்களினால் ஏற்பட்ட பயனைக் குறிக்கும் பட்டிகைகள் இவைகளை யெல்லாம் திரட்டிக் காட்டும் புஸ்தகங்கள், குல்மரோகம், நயனரோகம், ஸ்திரீ ரோகம, பாலரோகம், ரஸாயனம், வாஜீகரணம் இவ்வாறு ரோகப் பிரகரணங்களையோ, அங்கங்களையோ தலைப்பெயராகக் கொண்ட புஸ்தகங்கள், பல பல தனிப் பெயரில்லாதவை, ஔஷதிகளுடைய உருவங்களை உள்ளபடி உணர்த்தும் வரைந்த சித்திரப்படங்கள் எல்லாம் இன்றைக்கும் நாளைக்கும் பார்ப்பவர்களைப் பரவசமாக்கிக் கொண்டு ஸரஸ்வதிமஹாலில் விளங்குகின்றன. ஸ்ரீ சரபேந்திரருடைய தந்வந்தரி மஹாலில் ஆராய்ச்சிக கழகத்தில் நடந்திருக்கும் இக்காரியங்கள் அனைத்தும் அநேகம வைத்தியர்களுடைய ஸமூகத்தினு

லும், ஒரு தேசத்திய வைத்தியர்கள் மட்டுமல்லாமல் பல மாகாணங்களைச் சார்ந்த வைத்தியர்களுடைய ஸமூகத்தினால் மட்டுமே சாதிக்க முடியுமென்பதற்கு ஸந்தேஹமற்ற பிரமாணங்களாய் விளங்குகின்றன. அரசனால் ஆதரிக்கப்பட்ட அந்தப் பெரிய ஆராய்ச்சிக் கழகத்தின் வைத்திய ஸமுதாயத்தில இந்த ராஜமிருகாங்கத்தைத் தொகுக்கும் பணியில் நியமிக்கப்பட்டவர் ஸம்ஸ்கிருத பாஷையில் கவியாயும் தமிழ்நாட்டினரான ஒரு பெரிய ஆயுர்வேத வித்வானாக இருக்கவேண்டுமென்பதை ராஜமிருகாங்கத்தின் விமர்சத்தினால் எளிதில் தீர்மானிக்கலாம். ஒரு ஆராய்ச்சிக் கழகத்தினாதரவில் வைத்தியர்களுடைய ஸமூகத்தினால் வெளியிடப்படும் நூல்களில தனிப்பட்ட ஒருவர் பணியாற்றியிருப்பினும் தன் பெயர் நூலில் கூறாததே இயற்கையல்லவா!

## நூலின பெயரில் விசாரம்

இதில இவ்விதம் சிலர் ஸந்தேகிக்கலாம் :— இயற்றியவரின் பெயரில் போல புஸ்தகத்தின் பெயரிலும ஸந்தேகம் ஏற்படக்கூடியதே புஸ்தகத்தில் உள்ளே பெயரில்லாததே ஸந்தேஹத்திற்குக் காரணம். இருந்தாலும் புஸ்தகத்தின் பெயருக்கும் விஷயத்திற்கும் ஸம்பந்தமில்லை. வேறு புஸ்தகங்களிலிருக்கும் யோகங்களை எடுத்து அப்படியே நகல செய்துள்ள ஒரு கட்டுரைப் புஸ்தகத்திற்கு புதிய தனிப் பெயரிடுவதால் பிரயோஜனமில்லை. ஆதலால் ஸரஸ்வதீமஹாலில் தனிப் பெயரில்லாமல் சேகரிக்கப்பட்டிருக்கும் 'நாநாவித வைத்தியகம்' என்ற புஸ்தகங்களுடைய கூட்டத்தில்தான் இதையும் சேர்க்கவேண்டும்.

இவர்கட்கு உத்தரம கூறுகிறோம் :- இந்த ஸந்தேஹங்கள் ஒன்றுக்குமே ஆதாரமில்லை. கிரந்த கர்த்தாவினால் கிரந்தத்தின் ஆதியில் 'ராஜமிருகாங்கம் என்ற வைத்தியக் கிரந்தம்' என்றும், அந்தத்திலும் 'ராஜமிருகாங்கம் முற்றிற்று' என்றும ஐயமற எழுதியுள்ளதால் நூலின் பெயர் நூலில் காணவில்லையென்ற பிரச்னமே எழ இடமில்லை.

ராஜமிருகாங்கம் என்று புஸ்தகத்திற்குப் பெயரிட்டதில் முக்கிய ஸ்வாரஸ்யம் ஒன்றுள்ளது. அதாவது—ஆயுர்வேதசாஸ்திரக் கிரந்தங்களில ஔஷதங்களுக்குப் பெயரிடும் முறை என்னவெனில், அநேகமாய் ஒரு மருந்தின் யோகத்தில் எந்த திரவ்யத்தின் பெயரால் ஆரம்பித்து அந்த யோகம் பேசப்படுகிறதோ அந்தத் திரவ்யத்தின் பெயராலேயே அம்மருந்து யோகத்தின் பெயர் பேசப்படும் அசுவகந்தா ரஸாயனம், தாளீசசூர்ணம், தசமூலாரிஷ்டம் இவை போன்றவைகளிங்கு சான்ருகும். இந்த முறை ஔஷத யோகங்களுக்கு மட்டுமல்ல; புஸ்தகங்ளில் பிரதி அத்யாயங்களின பெயர்களும் வாக்யத்தின் ஆரம்பப் பதத்தின் பெயரால் வியவஹரிக்கப்படுகின்றன. சரகஸம்ஹிதை முதலியவைகளில அத்யாயப் பெயர்கள் 'அபாமார்க்க தண்டுலீயாத்யாயம்', 'ஆரக்வதீயாத்யாயம' முதலிய பல ஆரம்பத்திலிருக்கும் ஔஷதியின் பெயரால் இருப்பதைக் கவனிக்கவும். இம்முறையில் முதலில் ராஜமிருகாங்க மருந்தைக் கூறும் புஸ்தகத்திற்கு ஆரம்ப மருந்துப் பெயரால் புஸ்தகத்தின பெயரிடுவது பெரிய ஸ்வாரஸ்யத்தைக் கொடுக்கின்றதல்லவா! இது புதிய வளர்ச்சி. ஆதலால் நூலின் பெயருக்கும் விஷயத்திற்கும் ஸம்பந்தமில்லை யென்று நினைப்பது தவறு ஆகவே போஜராஜன் செய்த ராஜமார்த்தண்டம் என்ற வைத்திய நூலுக்கு அப்பெயரிடுவதற்குக் காரணம் மிகவும தேடவேண்டியதில்லை. சரபோஜி அரசனால் செய்விக்கப்பட்ட புஸ்தகத்திற்கு ராஜமிருகாங்கம் என்று பெயரிடுவதில் முதல் யோகப்படி புஸ்தகத்திற்குப் பெயர் அமைக்கப்பட்டு விட்டதால காரணம் கூறுவதில் சிரமமொன்று மில்லை. ராஜமிருகாங்க ரஸத்தை வேறு புஸ்தகத்திலிருந்து எடுத்திருந்தாலும் இக்கவி அதை அப்படியே எழுதிவிடவில்லை. அந்த விருத்தத்தை மாற்றி அந்த யோகத்தின் இறுதியிலேயே மங்களம் சேர்த்து மங்கள சுலோகமாகவே அதை அமைத்துவிட்டார்

பல்வேறு புஸ்தகங்களிலிருந்து ஒன்றுக்கு எடுத்து நகல் செய்து புஸ்தகமாக்கியிருந்தாலும், தனிப் பெயர்

R—iii

வேண்டாமே என்று ஒரு கக்ஷி சொன்னீர்களே அது சரி யல்ல. மிகப் பழைமையான ஸ்ரீ வாகபடாசாரியரே இவ் விதம் செய்திருக்கிறார். சரக ஸுச்ருத காச்யபாதி ஸம ஹிதைகளில் இல்லாததான ஒரு விஷயங்கூட அஷ்டாங்க ஹிருதயத்தில் கிடையாது சரகாதி புஸ்தகங்களிலிருந்து எல்லாவற்றையு மெடுதது எழுதியிருந்தாலும் கூட தன் கிரந்தத்திற்கு அஷ்டாங்கஹிருதய மென்று வாக்படாசாரி யர் பெயரா வைக்காமலில்லை. இவ்விதம பூர்வபக்ஷி புஸ்த கப் பெயரில் கிளப்பிய எல்லா ஸந்தேஹங்களும் அடிக கப் பட்டன.

## புஸ்தகத்தின் உபயோகம்.

ராஜமிருகாங்கம பிரஸித்தமாயும் ஸுலபமாயும் இருக்கும் சில வைத்திய நூல்களிலிருந்து சில மருந்து முறைகளைமட்டும எடுததுப் போதிக்கின்றபடியால் இந்தப் புதிய தனிப் புஸ்தகத்தினால் என்ன உபயோகமென்று நினைத்துவிட முடியாது. ஒரு க்ஷணமும் உதாஸினம் செய்யமுடியாது இந்நூலிலும் அநேகவிதப் பிரயோ ஜனங்கள் நிறைந்துள. கூறுகிறோம், கவனியுங்கள் பிரா சீனமான பெரிய பெரிய வைத்தியக கிரந்தங்களில் எண் ணில்லாத மருந்து முறைகள் கூறப்பட்டிருக்கின்றன, உண்மையே ஆயினும், ஓர் புதிய வைத்திய அப்யாஸிக்கு ஒரு வியாதியின் அதிகாரத்தில் அநேக மருந்து முறைகள் நிறைய உபதேசித்திருக்கின்றனவே; இவைகளில் எவை முக்கியமானவை; கைகண்ட பலன் உடனே அளிக்கவல் லது; எதைக கையாளவேண்டும் என்ற ஒரு பகுத்தறிவா னது மேறபடி மருந்துகளைக் கையாண்டு அநுபவித்த குரு மார்களின் பரம்பரை சிக்ஷை ஞானமில்லாமல் கிட்ட முடி யாது, பல தடவை பரீக்ஷிக்கப்பட்டு, கைகண்ட பலனளிக் கவல்ல மருந்துகளிவை யென்று நமக்கு இந்த ராஜமிரு காங்கநூல் போதிக்கின்றது புதிய ஔஷதங்களை வியாதி ஸ்தனிடம் புதுப் பரீக்ஷை செய்வதைப் பார்க்கிலும், முற்கெ னவேயுள்ள ஔஷதங்களில் பரீக்ஷை செய்து தேறியவை களைப் பிரயோகம் செய்வது எவ்வளவு விரும்பத் தக்கது!

இதுமட்டுமல்ல; பழைய புஸ்தகங்களில் இருக்கும் ஔஷதங்களுடைய செய்முறைகளில் திரும்பத்திரும்பப் பரீக்ஷை செய்து புதிய விசேஷங்களை உபதேசிக்கின்றது. இந்தப் புதிய செய்முறைகள் மேற்கொண்டு ஆராய்ச்சி செய்பவர்களுக்கு மிகவும் உபகாரத்தை யளித்து மேல் மேல் விழிப்பை யுண்டாக்குகின்றன. உதாஹரணமாக இந்நூலில் த்ரைலோக்யசிந்தாமணி ரஸம், வஸந்தகுஸுமாகர ரஸம் முதலிய மருந்துகளுக்கு அதிக வீர்யமளிக்கும் நோக்கத்துடன் செய்முறைகளில் யுக்தியாக நூலாசிரியரால் மாற்றப்பட்ட புதிய செய்முறைகள் பார்க்கத் தகுந்தவை.

மேலும் பெரும் புஸ்தகங்களில் சொல்லிய மருந்துகளில் சேரும் திரவ்யங்கள் எல்லாம் எல்லாத் திசைகளிலும் எளிதில் கிடைக்கக் கூடியவைகளாக இல்லை. சில சில த்ரவ்யங்கள் சில சில நாடுகளில் வெகுவாய் எளிதில் கிடைக்கின்றன என்பது மருந்து செய்யும் பழக்கமுள்ள வைத்தியர்களுககுப் பிரத்யக்ஷமாய்த தெரிந்த விஷயமே. அந்தந்த உள நாட்டில் எளிதில் ஏராளமாய்க் கிடைக்கும் வஸ்துக்களைக் கொண்டே சிகித்ஸையை உத்தமவழியில் செய்வதே சிறந்ததென்றும், இந்த வைததியனே ஸமர்த்தன் என்றும் அறிவாளிகள் புகழ்கின்றனா. வெகுதூரமான பிறநாட்டிலிருந்து அடையவேண்டிய மருந்துச் சரக்குகளையே சரண்புகுந்து, அடிக்கடி மருந்துச் சரக்குகள் காலத்தில் கிடைக்காமல் வருந்தும் வைததியன் முன் யோஜனையுள்ள புததிசாலியாகமாட்டான். தென்னாட்டை யலங்கரிக்கும் அரசனுதரவால் தயாரான இந்த ராஜ மிருகாங்க புஸ்தகம் நமது தென்னாட்டில் ஏராளமாய் எளிதில் கிடைக்கும் திரவ்யங்கள் சேரும் ஔஷத யோகங்களைப்பெரும்பாலும் உபதேசித்து, எந்த நாட்டில் எவனிருக்கிறானே அவனுக்கு அந்த நாட்டிலிருக்கும் ஔஷதம் ஹிதமாகும் (यस्मिन् देशे हि यो जातस्तस्य तज्जौषधं हितम्) என்ற மஹர்ஷி வாக்யத்தின் தத்துவத்தை இன்றைக்கும் நமக்கு உணர்த்திக் கொண்டிருக்கிறது. ஆதலால் முந்திய நூல்களில் சொல்லியிருக்கும் மருந்து முறைகளுக்கு நகல் என்று

இந்தப் புஸ்தகத்தை எண்ணவேண்டாம். நமது தேசத்தையும் காலத்தையும் கவனித்துப் பழைய புஸ்தகங்களுடைய யோக முறைகளைச் சீர்திருத்திப் புனரமைப்புச் செய்துள்ள புஸ்தகமாகத் தெரிந்து கொள்ளுங்கள். மேலும், பூர்வீக வைத்திய நூல்களில் சொல்லப்படாததும், இவரால் கண்டுபிடித்துச் சேர்க்கப்பட்டதும், நல்ல பலனை எரிக்கவல்லதுமான அநேக புதிய ஔஷத முறைகளும் இந்நூலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவ்வழியில் தயாரிக்கப்பட்ட கிரந்தங்கள் தான் மருத்துவத் தொழிலில் புதிதாய் இறங்கிய வைத்தியர்கட்கு, எளிதில் செல்லமுடியாத மருந்து முறை அரண்யத்தில் அவர்கள் சஞ்சரிக்கும் பொழுது வழிகாட்டிகளாயும், கைப்பிடிப்புகளாகவுமுபகரிக்கின்றன. தானுகத தெரிந்துகொள்ளக் கூடிய நூலின் பயன் விஷயத்தில் அதிகமெழுத வேண்டாம்.

## தமிழ் மொழிபெயர்ப்பின் பயன்.

ஸம்ஸ்கிருத பாஷையில் செய்யப்பட்டுள்ள வைத்திய நூல்களுடைய தமிழ் மொழிபெயர்ப்பானது ஸாதாரணப் பொது ஜனங்களுடைய ஹிருதயத்தில் ஆயுர்வேதத்திற் கூறிய மருந்து முறைகள் மிகவும் எளிதிற் கிடைக்கக் கூடியவை, சிரமமின்றி செய்து முடிக்கக் கூடியவை, மகத்தான குணங்களுடையவை என்றெல்லாம் நன்கு போதித்து, ஜனங்களுக்கு ஆயுர்வேதத்தில் ருசியையும் ஆதரவையும் அதிகம் பிரசாரம் செய்யும். ஸம்ஸ்கிருதம் அதிகம் அப்யஸித்துத் தேர்ச்சி பெறாமல், தேசபாஷையான தமிழில் ஆயுர்வேத விஷயங்களைப் பயின்று, ஸம்ஸ்கிருதத்திலிருக்கும் ஆயுர்வேத சாஸ்திரத்தை மேலும் அறிய ஆசைப்படும் வைத்தியர்களுடைய ஞானுபிருதம் பருகவேண்டுமென்ற ஆவலைப் பூர்த்தி செய்யவல்லது. தமிழ்நாட்டில் ஸித்த வைத்யம் என்ற பெயரில் இப்பொழுது பிரஸித்தி பெற்றுள்ள வைத்திய முறையானது உண்மையில் ஆயுர்வேதத்திலிருந்து வேறுபடாமல் ஒன்றேயாயினும், ஸம்ஸ்கிருதத்தில் சொல்லியுள்ள ஆயுர்வேதத்திலிருந்து ஸித்த வைத்திய முறை வேறுபட்டதென்று ஸம்ஸ்கிருத மறியா

மையினாலுண்டானதும், அரசியல் உலகச் சூழ்ச்சியினால் கிளப்பி விடப்பட்டதுமான தூர்வாதத்தையும் அகற்றும் என்ற இந்த மூன்றுவிதப் பிரயோஜனங்களைக் கருதி என்னால் இந்த ராஜமிருகாங்கத்திற்குத் தமிழுரை என் சிற்றறிவுக்கேற்றவாறு வரையப்பட்டது.

## ஸித்தவைத்திய விமர்சம்.

பூர்வபக்ஷம் :—

"ஆயுர்வேதமும் ஸித்த வைத்தியமும் வெவ்வேறு என்று வெகு நாட்களுக்கு முன்பே தீர்ந்த விஷயம்; சென்னை அரசாங்கத்தில் ஆயுர்வேதம் ஸித்தம், யூனானி— மூன்றுவித வைத்திய முறைகளுக்கும் தனித் தனியாக பள்ளிக்கூடமும், மருத்துவக் கூடமும் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பே நிறுவப்பட்டு இன்றும் நடத்தப்பட்டு வருவதை நீர் கவனிக்கவில்லையா? இவ்வாறு ஆயுர்வேத ஸித்த வைத்தியங்களுடைய வேற்றுமை அரசாங்க சட்டபூர்வமாய்த் தீர்மானமாகியிருக்கும் பொழுது, இவைகளுடைய ஒற்றுமையை இப்பொழுது எவ்விதம் சாதிக்க விரும்புகிறீர்?"— என்று கேட்டால் பதில் கூறுகின்றோம் :—

ஆயுர்வேதமும் ஸித்தவைத்தியமும் வெவ்வேறு என்று வாதிப்பவர்களுடைய மதச் சுருக்கமிது :—"தேரையர் அகத்தியர் போகர் முதலிய பதினெட்டுச் சித்தர்கள் தென்னாட்டில் மலயம் குடகு முதலிய பர்வதப் பிரதேசங்களில் வசித்து வந்தனர் அவர்களால் உலகின் நன்மைக்காக தமிழ் மொழியில் வைத்திய சாஸ்த்ரம் உபதேசிக்கப்பட்டது. ஸித்தர்களால் அருளப்பட்டதால் ஸித்த வைத்தியம் என்று பெயர் பெற்றது. இந்த சித்தவைத்திய சாத்திரத்தில் மூலிகை வைத்தியத்துடன் ரசம் முதலிய தாது பதார்த்தங்களுடைய சாரண மாரண முறைகளிலும், ரசவாதங்கள் கட்டுகளிலும் மகத்தான வீர்யமாய்ந்த முப்பூ சயநீர் முதலியவைகளுடைய பிரயோகங்

கள் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. அற்புதமான பலன்களை அளிக்கவல்ல மருந்துகளை முடிக்கக்கூடிய இம்முறைகள் சித்த வைத்தியம் தவிர வேறு முறைகளில் கிடையாது. இந்தச் சித்தர் முறை தமிழ் நாட்டில் பரம்பரையாக வைத்தியர்களால் கையாளப்பட்டு வருகின்றது. இவர்கள் சித்த வைத்தியர்களாவர்.

ஆயுர்வேதமோ வெனில், வட நாட்டில ஆர்யாவர்த்தத்தில் முனிவர்களால ஸம்ஸ்கிருதத்தில வரையப்பட்டது. அந்த வைத்திய முறையில் மூலிகைகளுடைய பிரயோகம் தான் அதிகம். ஆஸவாரிஷ்ட முறைகளும் தனியாக உரைக்கப்பட்டுள்ளன. இம்முறையைக் கையாளுபவர் ஆரியவைத்தியர்கள் அல்லது ஆயுர்வேத வைத்தியர்களாவர்.

இவ்விதம் இந்த இரு வைத்திய சாஸ்திரங்களையும் உபதேசித்தவர்கள் வேறு, விஷயம் வேறு, தேசம் வேறு, பாஷை வேறு, மருத்துவம் அநுட்டிப்பவர் வேறு என்று இருப்பதால் இங்கிலீஷ் வைத்திய முறை, ஹோமியோ வைத்திய முறைகளைப் போலவே ஆயுர்வேதத்திலிருந்து சித்த வைத்தியம் வேறுபட்டது. அது ஒரு சுதந்திரம் பெற்ற தனி வைத்திய முறையாகும்" என்று.

ஸித்தாந்தம் :—

ஐயா வேற்றுமைக்குள்ள ஐந்து காரணங்களில் விஷய வேற்றுமை எவ்விதம்? சொல்லுங்கள் முப்பூ ஐயநீர் முதலியவைகளுடைய பிரயோகங்கள் சித்தவைத்தியத்தில் மட்டும் தானிருக்கின்றன வென்று சொன்னீர்களே! முதலியவை என்பதால் வேறெந்தப் பிரயோகம் சேருகிறது? முட்டைத் தைலம், மயினத் தைலம் வான் மெழுகு முதலியவை சேரும்.

இதுபோன்ற மருந்து முறைகள் ஆயுர்வேதத்திலிருக்கின்றன. இல்லாவிடினும் ஆயுர்வேதமும் சித்தவைத்தியமும் வெவ்வேறு என்று நிரூபிக்க இவைகள் எல்லாம்

காரணங்களாக முடியாது எவ்விதமெனில் பிரமாணமென்ன, பிரமேயமென்ன, சாஸ்திரவிஷயமென்ன, சித்தாந்தமென்ன இவையெல்லாம ஒன்றாகவுள்ள ஒரு சாஸ்திரமானது அந்த சாஸ்திரத்தைச் சொல்லியவர்களின் மாறுதலாலோ அல்லது தேசத்தின் காலத்தின், பாஷையின், கேட்டவரின், கையாளுபவரின் மாறுதல்களாலோ, அல்லது சொல்லிய விஷயத்தில் ஒரு கூட்ட குறைவுகளினாலோ, வெவ்வேறான சாஸ்திரங்கள் என்று ஒருவராலும் ஒருகாலும் கூறவியலாது. இவைகளுடைய மாறுதல்களினால் சாஸ்திரத்தின் வேற்றுமையை ஒப்புக்கொள்ளுவதாகில் சித்தவைத்தியத்திற்கும் அநேகவிதங்கள் என்று ஏற்பட்டு விடும். தேரையர் உரைத்த வைத்திய சாஸ்திரம் வேறு, அகத்தியர் கூறின வைத்திய சாஸ்திரம் வேறு பெயருள்ள தென்றாகிவிடும். தமிழ் மொழியிலிருந்து சித்தவைத்தியத்தை அப்படியே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொன்னால் அது ஒரு வேறு வைத்திய சாஸ்திரமாகி விடுமே! சரி; ஆனால் எதனுடைய வேற்றுமையால் சாஸ்திரங்கள் வேறு என்று கூறவேண்டும்? பிரமாணம் பிரமேயம் முதலியவைகளுடைய பிரிவுகளால் தான் சாஸ்திரங்களுடைய பிரிவுகளைச் சொல்லவேண்டும் பிரமேய சித்தாந்தங்களுடைய பிரிவுகளினால் தான் ஸங்கிதம், ஸாஹித்யம், ஸாங்கியம், நியாயம், வியாகரணம் முதலிய சாஸ்திரங்கள் வெவ்வேறாக இருக்கின்றன. இவ்வாறாக பிரமேயம் முதலியவைகளுடைய வேற்றுமைதான் சாஸ்திரங்களுடைய வேற்றுமையை நிரூபிக்க வல்லது என்று நிச்சயமான பிறகு ஸம்ஸ்கிருத ஆயுர்வேத நூல்களில் முப்பூ-ஜயநீர்-வான்மெழுகு இவைகளோ வேறு சில மருந்து முறைகளோ அகப்படாவிடினுங் கூட இரு வைத்தியங்களுடையவும் பிரமாணங்கள் பிரமேயங்கள் சித்தாந்தங்கள் எல்லாம் முற்றிலும் ஒன்றானபடியால் சித்தவைத்தியமானது ஆயுர்வேதத்திலிருந்து அணுவளவும் வேறுபட்டதல்ல.

மேற்கொண்டும் ஆடும் கக்ஷியாவது — ஆயுர்வேதத்திற்கும் சித்தவைத்தியத்திற்கும் மக்களுடைய பிணியகற்

றுதல் ஆரோக்கியத்தைக் காப்பாற்றுதல் ஆகிய இலட்சியங்கள் எல்லாமொன்றேயென்பதில் இங்கு யாரும் ஒப்புக்கொள்ளாமலில்லை. உலகில் எத்தனைவித சிகித்ஸை முறைகள் இருக்கின்றனவோ அவைகள் எல்லாம் ஒரே லக்ஷ்யங்களை உடையவைகள் தான் என்று வைத்துக் கொண்டு, ஆலோபாதிக் வைத்தியம், ஹோமியோபாதிக் வைத்தியம் முதலிய எல்லாவித விதேச வைத்தியங்களையுங்கூட, லக்ஷ்யங்களுடைய ஒருமையினால் சாஸ்திரங்களுடைய ஒருமையை வாதிக்கும் நீர், எல்லாவித வைத்திய முறைகளும் நமது ஆயுர்வேதத்திலடக்கமென்று மனதில் தியானம் செய்துகொண்டும், உமது வீட்டினுள்ளே ஆயுர்வேதத்தினுலேயே எல்லா வைத்தியங்களையுமடைத்துக் கொண்டும், மகிழ்ச்சியினால் உடல் பூரித்துக் கொண்டிருக்கலாம். ஆனால், மற்ற விஷயமறிந்த படிப்பாளிகள், படிக்காத பாமரர்கள் கூட ஆலோபாதிக் வைத்தியம் ஹோமியோபாதிக் வைத்தியம் முதலியவைகளை ஆயுர்வேதமென்று ஒருக்காலும் கருதவே மாட்டார்கள். ஏனெனில், எல்லா வைத்தியங்களுக்கும் லக்ஷ்யங்கள் ஒன்றாயினும் நிதானம் சிகித்ஸைகளில் சாஸ்திரீயமான ஸித்தாந்தங்கள், வழிகள், மருந்து செய்முறைகள், பிரயோகங்கள், பத்திய முறைகள் ஆகிய எல்லா விஷயங்களிலுமே ஆயுர்வேதம் ஆலோபாதிக், ஹோமியோபாதிக் இவைகளுக்கு பரஸ்பரம் மிகுந்த வேறுபாடுகள் கண்கூடாயிருக்கின்றன. இதே யுக்தி காரணத்தினால் சித்தவைத்தியமும் ஆயுர்வேதமும் வேறுதான்"— என்று கூறினால்,

இது சரியில்லை. हिताहितं सुखं दुःखमायुस्तस्य हिताहितम् । मानञ्च तच्च यत्रोक्तमायुर्वेदः स उच्यते ॥ "அதாவது ஆயுஸ்ஸின ஸ்வரூபம், அதன் அளவு, ஸுகம், துக்கம், ஹிதம், அஹிதம் முதலாகிய ஆயுஸ்ஸைப் பற்றிய எல்லாவற்றையும் போதிக்கும் சாஸ்திரம் ஆயுர்வேதமெனப்படும்" என்றதான ஆயுர்வேதத்தின் அழகான யௌகிகப் பெயரினால் தேசீயமாயினும், விதேசீயமாயினும் முக்காலத்திலுமுள்ள அகிலமான வைத்திய சாஸ்திரங்களையும் ஸங்கிரஹம் செய்யப்

பொருந்தும். ஆனால் ஆயுர்வேத சப்தத்திற்கு யௌகிக மாத்ரமாகப் பொருள் தீர்மானிக்கும் பக்ஷத்தில் அழிவுள்ளதும் அசாஸ்திரீயமானதுமான நவீனக் கொள்கைகளையும் ஆயுர்வேதத்திற் சேர்ந்ததாகக் கொள்ளவேண்டி வந்து விடும். இததோஷங்களைச் சேராமல் தடுப்பதற்காக 'பங்கஜ' சப்தம்போல் ஆயுர்வேத சப்தமானது அபௌருஷேயமான வேதத்தின் உபாங்கமாயிருக்கும் ஒரு விசேஷமான சிகித்ஸா சாஸ்த்ரத்தைக் குறிக்கும் யோகரூட சப்தமாக பூர்வீக ஆசார்யர்களினால் பரிபாஷை செய்யப்பட்டு விட்டது. ஆகவே புனிதமான ஆயுர்வேத சப்தத்தினால் ரிஷிகளுடைய ஸம்பிரதாயத்தில் வராத ஆலோபாதிக் முதலிய விதேசீய வைதநியங்களை யழைக்க விரும்பவே மாட்டோம். லக்ஷ்யமொன்றாயிருப்பினும் நிதானம் சிகித்ஸை கொள்கைகளுடைய மாறுபாடான வழியினால் ஆலோபாதிக், ஹோமியோபாதிக் முறைகள் ஆயுர்வேதத்திலிருந்து வேறானவைகளென்ற உன்னபிப்பிராயத்தையே நாம் ஒப்புக் கொள்ளுகிறோம். பரமஸூக்ஷ்மங்களும், சாச்வதங்களும், பிரகிருதி விகிருதி ஹேதுக்களுமான ஆயுர்வேதத்தின் திரிதோஷ-பஞ்சபூத ஸித்தாந்தங்கள் எங்கே! அதிற் கூறிய ரஸ வீர்ய விபாக பிரபாவ விசேஷங்கள் எங்கே! மிகவும் ஸ்தூலமான ஜீவாணுகாரண வாதத்தில் மயங்கும், நிதநியம் மாறிக கொண்டிருக்கும் ஆலோபாதிக் வைத்தியத்தின் கொள்கைகள் எங்கே! அவைகளின்னமும் ஏகதத்வஸாதனத்திலிருந்து வெகுதூரத்திலிருக்கின்றன. ஆலோபாதிக் வைத்தியத்தைப் பற்றி நமக்கு இங்கு விசாரமில்லை. அது போகட்டும்.

ஹேது, லிங்கம், ஔஷதமென்ற மூன்று ஸ்கந்தங்களிலும் சாஸ்திரீய ஸித்தாந்தங்களில் ஆயுர்வேதத்திற்கும் ஸித்தவைத்தியத்திற்கும் பரஸ்பரம் பேதமில்லாவிடினும் ஸித்த வைத்தியர்களால் இன்று பிரயோகம் செய்யப்படும் அபூர்வ சக்திவாய்ந்த ரஸ பாஷாண மருந்து முறைகள், செய்முறைகள் இப்பொழுது ஸித்தவைத்தியத்தில் கையாண்டு வருகிறபடிக்கு ஆயுர்வேத

நூல்களில் காணாததால் ஆயுர்வேதத்திலிருந்து ஸித்த வைத்தியம் வேறுபட்டதென்று ஒரு ஸந்தேஹமுண்டா யிற்றே; அது முற்றிலும் தவறு. மருந்து முறைகளு டைய கூடக் குறைவு சாஸ்திரங்களுடைய ஒருமை வேற் றுமைக்குக் காரணமாகாது; பிரமாணப் பிரமேய ஸித் தாந்தங்கள் தான் காரணமாகும்—என்று ஏற்கனவே தீர்மானமான விஷயம். அல்லது ஸித்தவைத்தியர்களால் பிரயோகிக்கப்படும் சில மருந்து முறைகள் ஸம்ஸ்கிருத ஆயுர்வேதத்தில் இல்லையென்று உங்களுக்கு எவ்விதம் நிச் சயமாயிற்று? ஸம்ஸ்கிருதத்தில் ஆயுர்வேத யோகக் கிரந்தங் கள் ஸமுத்திரமா யிருக்கின்றன. இதில் அச்சானது இன் னும் குறைவு. அச்சாகவேண்டியதே அதிகம். இதென்ன உங்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல் எளிதிலறிய வல்லதா? உண்மையில் அச்சாகியிருக்கும் அளவில் ஸம்ஸ் கிருத ஆயுர்வேதத்தில் விஷ பாரத பாஷாணங்கள் சேர்ந்த பெரிய பெரிய மருந்து முறைகள் எவ்வளவிருக்கின்றன வோ அதில் ஆயிரத்தில் ஒருபங்கு கூட தமிழ் மொழியி லிருக்கும் ஸித்தவைத்திய நூல்களில் இல்லையென்பது இரண்டு பார்வையு மறிந்தவர்கட்குப் பிரத்யட்சம். அப் படியே ஏதாவதொரு முறையில்லாவிடினுங் கூட மருந்து களுடைய பிரயோக யுக்திகளில் மூலஸித்தாந்தங்கள் ஒரே விதமாய் இருப்பதால் அதிகப்படியான மருந்துவிஷயம்— ஆயுர்வேதம், ஸித்தவைத்யம் வெவ்வேறு என்று ஸாதிக் கப் பிரயோஜனமற்ற வாதமாகும்.

யூனானி வைத்தியமானது மருந்து முறைகள், பிரயோ கங்களில் ஆயுர்வேதத்துடன் அநேகமாய் ஸமானமாயிருப் பினும் அதில் தூஷ்யமான ரக்தத்தையும் நான்காவது தோஷமாய் சேர்த்துள்ள விபரீதக் கொள்கை யிருக்கும் காரணத்தால் யூனானி வைத்தியத்தை ஆயுர்வேதத்தி லிருந்து வேறாகவே நிச்சயிக்கின்றனர். இவ்வாறு ஸித்த வைத்தியத்திற்கும் ஆயுர்வேதத்திற்கும் பேதது ஸிங்க ளாந்த ஸித்தாந்தங்களில் எங்காவது சாஸ்திர ஸம்பந்தமான வேற்றுமை அப்பியாஸத்திலாவது ஏதாகிலு மிருந்தால்

தான் இவையிரண்டுக்கும் பேதம் கல்பிக்க முடியும். பேதம் சிறிதுமில்லை. ஆதலால், இரண்டு மொன்றே என்று முடிவு.

ஆயுர்வேதத்தினுடைய மூல ஸித்தாந்தங்களான திரிதோஷ பஞ்சபூத ஸித்தாந்தங்கள் மட்டும் சித்தவைத்தியத்தில் தழுவி எழுதப் பட்டிருக்கின்றன என்று கருதவேண்டாம். சாரீர பரிபாஷைகள், குணபாடங்கள், நோய்களின் பெயர்கள், திரவ்யங்களின் பெயர்கள் முதற்கொண்டு ஒவ்வொரு விஷயத்திலும் ஸம்ஸ்கிருதப் பதங்களே அப்படியப்படியே சித்தர்களால் தங்கள் நூல்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றதைப் பாருங்கள். 'வடமொழியில் வகுத்தவாறு உரைக்கிறோம்' என்று சித்தர்களே கூறுகின்றதைக் கவனியுங்கள்.

இவ்விதம் இரண்டு மொன்று என்று முடிந்ததால் சித்தவைத்தியம் ஸ்வதந்திர சாத்திரம் என்ற பேச்சிற்கு இடமில்லை. இங்கு இந்த சரித்திர விஷயமான உண்மை கவனிக்கத் தகுந்தது :—

முற்காலத்தில் திவ்ய திருஷ்டியுள்ள மஹர்ஷிகளினால் ஜீவகாருண்யத்தினால் ஆயுர்வேத சாஸ்திரமானது அங்கோபாங்கங்களுடன் ஸம்ஸ்கிருதபாஷையில் முதலில் உபதேசிக்கப்பட்டது. பிறகு ஆப்தர்களான தேரையர், போகர் முதலிய சித்தபுருஷர்களினால் ஸம்ஸ்கிருதபாஷையை விசேஷமாய் அறியாத வைத்தியர்கட்கும் வைத்தியம் செய்வதற்கு உபகாரமாயிருக்கும்படிக்கு ஸம்ஸ்க்ருதத்திலுள்ள ஆயுர்வேதத்தினுடைய காய சிகித்ஸை முதலிய எல்லா அங்கங்களிலிருந்தும் சிகித்ஸை செய்வதற்கு உபயோகமான மருந்து முறைப் பகுதி மட்டும் தமிழில் மொழிபெயர்த்துக் கூறப்பட்டது. ஸூத்ரம் நிதானம் சாரீரம் விமானம் முதலிய சாஸ்திர விசாரமான பகுதிகள் தமிழில் முற்றிலும் மொழிபெயர்க்கப் பட்டதாகத் தோன்றவில்லை. இதற்குக் காரணங்கள் :— ஸம்ஸ்கிருதம் தவிர வேறு பாஷைகளில் மேற்படி சாஸ்திர விசாரங்களை வியவஹாரம் செய்

வது கடினம் ஒன்று. மற்றது, முற்காலத்தில் பெரிய வித்வான்கள் சாஸ்திர விசாரம் செய்வதற்கு பாரதத்தில் எல்லா மாகாணங்களுக்கும் பொது மொழியாக விளங்கினது ஸம்ஸ்கிருதமே. ஆதலால் மொழிபெயர்க்கவேண்டிய அவசியமில்லாமலுமாயிற்று. தமிழ் மொழிபெயர்ப்பாளர்களான புராதன பண்டிதர்கள் தங்களது நூல்களிலேயே இவ்விஷயங்களை வடமொழியிலிருந்து வகுத்திட்டேன் என்று சாற்றியுள்ளார்கள். தமிழ் வைத்திய நூல்களில் ஸம்ஸ்கிருத வைத்தியக் கிரந்தங்களில் போல சாஸ்திர தத்துவ விசாரங்கள் விசேஷமாய் இல்லை. இந்நூல்களுக்கு மேல் வேறு அத்தாக்ஷி ஸம்ஸ்கிருததிலிருந்து ஆயுர்வேதம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதென்பதற்கும், மருந்துப் பகுதி தவிர மற்றவை விசேஷமாய் தமிழில் எழுதப்படவில்லை யென்பதற்கும் தேவையில்லை.

ஒரு சாஸ்திரமானது ஒரு மொழியிலிருந்து மறுமொழியில் எழுதப்பட்டதற்காக் வேறு சாஸ்திரமாக மாறிவிட முடியாது. தமிழ்நாட்டில் முற்காலத்திய வித்வான்கள் ஆயுர்வேத சாஸ்திரார்த்தங்களை ஸம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் மக்களின் ஹிதத்திற்காக எழுதியுள்ளது போலவே இந்த பாரத தேசத்தில் அந்தந்த மாகாணங்களில் உள்ள பற்பல பாஷைகளில் அந்த நாட்டுப் பண்டிதோத்தமர்கள் ஆயுர்வேத விஷயங்களை வரைந்துள்ளார்கள். தேச பாஷையில் எழுதப்பட்ட ஆயுர்வேதம் வேறு வைத்திய சாஸ்திர மென்ற எண்ணம் பாரத தேசத்தில் ஓரிடத்தில் கூட பண்டிதர்களுக்குமில்லை; பாமரர்களுக்குமில்லை. இன்றுமில்லை; நாளைக்குமேற்படாது. இங்கும் நமது தமிழ்நாட்டிலும் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்மொழியிலிருக்கும் வைத்திய சாஸ்திரத்திற்கு சித்த வைத்தியமென்ற பெயர் இருந்ததில்லை. முன்காலத்தில் வெளியிடப்பட்டுள்ள எல்லா தமிழ் வைத்திய நூல்களும் ஆயுள்வேதம் என்ற தலைப் பெயரையே வகித்துக் கொண்டு ஸம்ஸ்கிருதத்திலுள்ளபடியே பரிபாஷை பதங்

களை பிரயோகித்துக் கொண்டு இன்றைக்கும் பிரகாசிக்கின்றனவே; இவைகளே இதற்குப் பிரத்யட்சப் பிரமாணமாகும்.

தமிழ்நாட்டில் ஆயுர்வேதம் என்ற பெயரால் முன்பு பிரஸித்தமாயிருந்த வைத்திய சாஸ்திரத்திற்கு சித்தவைத்தியமென்று புதிய பெயர் மாறினதிற்குக் காரணம் பிராம்மணர் பிராம்மணரல்லாதார் முதலிய ஜாதிகளுக்குள் பரஸ்பரம் த்வேஷத்தை யுண்டுபண்ணும் பேதோபாயத்தினால் தங்களுடைய அரசாட்சியை இந்நாட்டில நிலைநிறுத்தியுள்ள வெளிநாட்டு வெள்ளையர்களுடைய அப்பொழுது இருந்த அரசியல் சூழ்ச்சிதான் என்று ஸமீபகாலத்திய அரசியல் சரித்திரம் அறிந்த அனைவருக்கும் தெளிவாகத் தெரிந்த விஷயமிது. அப்பொழுது ஜனித்து இன்னும் தொடர்ந்து கொண்டிருக்கும் சித்தவைத்தியமென்ற பெயர்மாற்றை விவேகம் நிறைந்த தமிழ்நாட்டுப் பண்டிதர்கள் முன்பிருந்ததை நினைத்துப் பார்த்து உடனே அகற்றிவிட வேண்டும். தமிழ் மொழியிலும் முன்பு போலவே ஆயுர்வேதமென்றே வியவகாரம் செய்ய வேண்டும்.

சரி, இப்பொழுது ஆயுர்வேதத்திலிருந்து சித்தவைத்தியம் வேறுபட்டதல்ல வென்று தெரிந்தது. தத்துவத்தில் இவைகளுக்கு வேற்றுமையில்லாவிடினும் முதலில் அரசியல் சூழ்ச்சியின் பேதோபாயத்தினால் கல்பிக்கப்பட்ட வேற்றுமைக்கு சென்னை அரசாங்க இந்திய வைத்தியப் பள்ளிக்கூடத்தில் ஆயுர்வேதத்திற்கும் ஸித்தவைத்தியத்திற்கும் தனித்தனிப் பள்ளிக்கூடங்கள் வைத்தியசாலைகள் ஏற்பட்டு முப்பது வருடங்களுக்கு மேற்கொண்ட பழக்கமாகிவிட்டதால் தார்ட்டிகமும் ஏற்பட்டுவிட்டது. இப்பொழுது இவைகளைத் திரும்பவும் ஒன்றாக்குவதில் எடுத்தும் பிரயாசை வீணாகும் சேர்க்கவியலாது என்று எண்ணுவது சிறிதும் சரியாகாது. சேர்த்தால்தான் ச்ரேயஸ்ஸு ஏற்படும் சேர்க்காவிடில் தீமை விளையும்

*இதைக் கவனிக்கவும் :—*

*கணிதம். ரஸாயன சாஸ்திரம், பௌதிக சாஸ்திரம் முதலிய விஞ்ஞானங்களில் போலவே சிகித்ஸா சாஸ்திரத்திலும் தத்துவ விஷயத்தில் ஸந்தேஹத்திற்கு இடமில்லை. பண நெருக்கடி நிறைந்த நமது பாரதவர்ஷத்தில் பற்பல பெயருள்ள வைத்திய முறைகளுக்குத் தனித்தனியாக பாலனம் செய்யவும், அபிவிருத்தி செய்யவும் வசதியில்லை. முற்கூறிய காரணத்தால் பயனுமில்லை. ஆதலால் உலகில் ஆங்காங்கு உலாவும் அகிலமான வைத்திய முறைகளை ஒன்று சேர்த்து அதில் ஸாரமான ஓர் சிகித்ஸை முறையை இரண்டாவது இல்லாமல் பாரதநாட்டில் நிறுவ வேண்டும். உடனே இதற்கு வேண்டிய அலுவல்களைச் செய்ய எல்லா வித வைத்திய வித்வான்கள் சேர்ந்து முயற்சிக்க வேண்டும். இந்த ஸங்கல்பம் இப்பொழுது நமது பாரத அரசாங்கத்திற்கும் பாரத தேசத்திலிருக்கும் சில ஆலோபதிக் வைத்திய விஞ்ஞானாசிரியர்களுக்கும் திருடமாய் ஏற்பட்டிருக்கிறது.*

*ஆயுர்வேத பண்டிதர்களான நமக்கும் இதே ஸங்கல்பம் இன்னும் தீவ்ரமாய் ஜ்வலிக்கின்றது. ஆனால் நிறுவப்பட வேண்டியது எந்த வைத்திய முறையென்பதில்தான் நமக்கும் பிறருக்கும் அபிப்பிராய பேதமிருக்கின்றது. தன்னலம் கோரும் ஆலோபாதிக் வைத்தியர்கள், ஆயுர்வேதத்திலிருந்து உபயோகமாயிருக்கும் மருந்து பாகங்களை ஆலோபாதிக் வைத்தியத்துடன் பிணைத்து அதொன்றையே இந்தியாவில் பொது வைத்தியமாக ஸ்தாபிக்க விரும்புகின்றனர். இந்த வழியானது ஆயுர்வேதத்தை நாளடைவில் அழித்துவிடுமென்பது நிச்சயம். ஆகையால் ஆயுர்வேதத்தை அழியவிடாமல் காப்பாற்ற எண்ணமுள்ள ஆயுர்வேத வைத்தியர்கள் தீர்க்கமான முன்யோசனையுடன் இப்பொழுது ஆயுர்வேதத்தில் தேவையாக இருக்கும் கலாபாகங்களையும் அப்பியாஸ விஸ்தாரங்களையும் இதர வைத்திய முறைகளிலிருந்து ஸ்வீகரித்து ஆயுர்வேதத்துடன் ஒன்று சேர்த்து நமது ஆயுர்வேதத்தையே முன்பு*

போலத் திரும்பவும் இரண்டற்ற ஒரே உலக வைத்தியப் பதவியில் அதிகாரமடை யும்படி செய்துவிட வேண்டிய தவசியமாகும். இந்தப் பெருங் கார்யத்தில் இந்திய வைத்திய முறைகளை ஒன்று சேர்த்தலே முதல் முதல் கார்யமாகும். யூனனி வைத்திய முறையானது ஆயுர்வேதத்தையே மூலமாக உடையதாயினும் அதில் சில கொள்கைகள் மாறியுள்ளதால் ஆயுர்வேதத்தையும் யுனனியையும் ஒன்ருக்குவதற்கு சில ஆராய்ச்சிகள் தேவை. சித்தவைத்தியமோ ஆயுர்வேதத்திலிருந்து உண்மையில் ஒரு மாத்ரையளவும் வேறுபடாதது. முன்பு ஆயுள்வேதம் என்ற பெயரில் பழகினது, அந்தப் பழைய பெயரில் திரும்பவும் அழைப்பதனுலேயே தென்பாரதம் பூராவும் ஆயுள்வேதம் என்றே ஒரே இந்திய வைத்திய சாஸ்திரம் ஸுலபமாய் ஸ்தாபிதமாகி விடும். பெரும் பயனை விளைவிக்கும் இந்த முக்கியமான கார்யத்தில் ஆலோசனையுள்ள எவன்தான் க்ஷண நேரமாகிலும் வாளாவிருப்பான்?

மேலும், எல்லா சாஸ்திரங்களுக்கும் தேசிய மொழியில் புஸ்தகங்கள் எழுதி வெளியிட வேண்டும் என்ற பேச்சு இப்பொழுது எங்கு பார்த்தாலும் தீவ்ரமாய் பரவியுள்ளது. சித்தவைத்தியத்தில் ஔஷத யோகங்கள் மட்டும்தான் பாடப் படுகின்றன. சிகித்ஸா சாஸ்திரத்திற்கு அத்யாவச்யமான ஸூத்ர சாரீர நிதான விமானம் முதலிய விஷயங்களை சித்தவைத்தியத்தில் அதன் மூலஸித்தாந்தப்படி சேர்த்துப் பூர்த்தி செய்ய விரும்பினுல் அப்பொழுது வடமொழியிலிருக்கும் ஆயுர்வேதத்திலிருந்து தான் ஸகல அம்சங்களும் எடுத்துக்கொள்ளுதல் வேண்டும். வேறு மூலமில்லை. ஆதலால் சித்தவைத்யமென்று இனி தனிப்பெயர் பூணுவதில் பொருளில்லை.

இவ்வளவு விளக்கிக் கூறியும் சித்தவைத்தியத்தை அதன் மூலமான ஆயுர்வேதத்துடன் பெயர் விஷயத்தில் ஒன்று சேர்க்க, எதிரிடை நோக்கத்துடன், அங்கீகாரம் செய்ய இஷ்டப்படாவிடில் அதனுல் ஆயுர்வேதத்திற்கு அணுவளவுங் குறைவு கிடையாது. ஆயுர்வேதம் அகில

பாரதத்திலும் பூர்ண வியாபகம் பெற்றுள்ளது சித்த வைத்தியம் தமிழ் பூமியிலும் ஓரளவிற்கே பிரசாரமுள்ளது. அதற்குத தான் லௌகிகமான அபிவிருத்தியிலும் சாஸ்திரீயமான அபிவிருத்திக்கும் ஹானி பல முகததில் உண்டாகும். பெயர் வெவ்வேறுயிருந்தாலும் ஆயுர் வேதமும் சித்தவைத்தியமும் வாஸதவததில் பேதப்பட்டதில்லையென்ற தத்துவத்தைப் பொய்ப்பிக்க ஒருக்காலும் முடியாது. நடுவில் வந்த விஷயததில் படிப்பவர் மனதில வெறுப்பேற்படும்படி மிக விரிவாக எழுதியது போதும.

## ஆயுர்வேதாபிவிருத்தி.

எல்லா அங்கங்களுடன் கூடிய ஆயுர்வேதத்தையே முன்போல உலகில் பூராவியாபகமாய் அததுவைத சிகிதஸா சாஸ்திரமாய் நாம் செய்யவேண்டும் என்று மேலே கூறினோம். ஆதலால் அப்படிப்பட்ட ஆயுர்வேத வளர்ச்சி விஷயத்தில் கொஞ்சம் சொல்லவேண்டியிருக்கிறது ஆயுர் வேதத்தின் வளர்ச்சியைப் பற்றி இப்பொழுது பாரத தேசம் பூராவும் ஆயுர்வேதாபிமானிகள் யாவரும விமர்சனம் வெகுவாய்ச் செய்கின்றனர் இதில் மத பேதஙகள் பல. ஆயுர்வேதத்திற்கு சாஸ்திர ஸம்பநதமான வளர்சசி விஷயத்தில் மட்டும் எனது அபிப்பிராயத்தைச சுருககக் கூறுகிறேன்.

சில ஆலோபாதிக் டாக்டர்கள் ஆயுர்வேதத்திலிருக கும் அபூர்வமான மருந்துகளின் வீர்யங்களில் மயஙகினவர்களாக மேல்நாட்டு நவீன விஞ்ஞான வழியில் ஆயுர்வேத விஷயங்கள் யாவற்றையும் பரீக்ஷை செய்து, உபயோகமான அம்சங்களை எல்லாம் நவீன விஞ்ஞான சாஸ்திரப்படி சித்தாந்தமான ஆலோபாதிக் வைதநிய முறையுடன் சேர்க்கும் உத்தேசததுடன் அதற்கு வேண்டிய சாதனங் களைச் சேகரிப்பதில் பரபரப்புடனிருக்கின்றனா. திர்கக ஆலோசனை யில்லாத ஆயுர்வேத வைத்தியர்களும் சிலா இதை ஆயுர்வேத அபிவிருததியென்று எண்ணிகொண்டு மகிழ்ச்சி யுறுகின்றனர். ஆயுர்வேதததிலிருந்து பிரயோ

ஜனமான ஔஷத முறைகளை ஸ்வீகரித்துக கொள்ளுவ தென்ற இந்த வழியானது முதலாவதாக மேல் நாட்டு வைததிய முறையை மேலும் பெருக்கச் செய்யுமே தவிர ஆயுர்வேதத்திற்கு உபகாரமாகாது. பிறகு காலக்கிரமத் தில் ஒரு ஸமுத்ரங்கத்திலிருந்து வெட்டி வெட்டி பூரா ரத் னங்களையும் எடுத்துக் கொண்டு பிறகு ஸமுத்ரங்கக்குழியை மூடிவிடுவது போல் ஆயுர்வேத சாஸ்திரத்தைக் குழியிற் தள்ளி மூடிவிடும். ஆயுர்வேதமென்ற பெயரையே திரும் பக் காதினுல் கேழ்க்க முடியாத நிலையேற்படும். அந்தோ! ஆயுர்வேத வைத்தியர்கள், தங்களுடைய கடமையை அறி யாதவர்களாக இன்னமும் தூங்குகின்றனர் என்று நாம் வருந்துகிறேம்.

மேல் நாட்டு விஞ்ஞானிகள் தங்களுடைய சாஸ்திரத் தின் மேன்மேல் வளர்ச்சிக்காக எல்லா வைத்திய முறை களையும் அலசிப் பார்ப்பதில் எப்பொழுதும் ஈடுபட்டுக் கொண்டிருப்பதை ஆயுர்வேத வித்வான்களாகிய நாம் அநுதினமும் பேசாமல் பார்த்துக் கொண்டு மாத்திரமி ருந்து விட்டு, நமது சாஸ்திரத்தின் பரிபாலனத்திற்கும் வளர்ச்சிக்கும் அவ்விதமாக இன்னமும் பிரயத்னம் செய்யாவிடில், நாம் பரிஹாஸத்திறகு ஆளாக மாட் டோமா? விஞ்ஞானத்தில் சாதுர்யமும் மேன்மையுமிழந்த மதியுடையவராக ஆகிவிடமாட்டோமா? நமது பாரத தேசத்தின் பூர்வீக விஞ்ஞானிமஹான்களுக்கு செய்நன்றி கொல்லிகளாக எண்ணப்படமாட்டோமா?

ஆயுர்வேதம் முன்பு போல் ஸர்வாங்கங்களிலும் மேன்மைபெற்றுப் பிரகாசிக்காவிடில், அல்லது இதர வைத்தியமுறையைப் பார்க்கிலும் ஏதாவதொரு விஷயத் திலாவது கொஞ்சம் குறைவுள்ளதாயிருப்பின், நமது ஆயுர்வேதத்திற்கு ஆதரவு நமது பாரததேசத்தில்கூட சீக்கிரத்தில் மறைந்துவிடுமென்பது முற்றிலும் ஸத்தியம். ஆயுர்வேதத்தின் மூலதத்வஸித்தாந்தங்கள் அழிவற்ற தாயினும், அதன் எல்லா அங்கங்களுடைய சிகித்ஸை யுக்திகள் ஸர்வோத்தமமாயிருப்பினும், இப்பொழுதுள்ள

புதிய மேல் நாட்டு விஞ்ஞானங்களால் கண்டுபிடிக்கப் பட்ட கருவிகளினுல் எளிதில் ஸாதிக்கக் கூடிய சில அருமைக்கார்யங்கள் ஆயுர்வேதத்தில் இன்றிலலாததால் இப்பொழுது நாகரிகம் படைத்த ஜனங்களிடையே ஆயுர் வேதமானது சிறிது மங்கினதாகவே புலப்படுகிறது. ஆகையால் தீர்க்கதர்சனத்துடன் ஆயுர்வேதவித்வான்கள் ஆயுர்வேதத்திற் காணும் குறைவின் உருவத்தையும் கார ணத்தையுங் கண்டுபிடித்து அவைகளை வேரறக் களையச் செய்யவேண்டும்.

இதில் ஒரு சாரார் உபதேசிக்கின்றனர்:- மேல் நாட்டுப் புதிய விஞ்ஞானங்களால் கண்டுபிடிக்கப்பட்ட நிதானம் முதலியவைகட்கு உபயோகமான யந்திரம் முதலிய சாத னங்களையும், வியாதிகளுடைய பிரத்யேக மருந்து விசே ஷங்களையும் (Specifics) வ்ரணவைத்தியம் (Surgeory) சாலாக்கிய தந்திரங்களையும் (E N T. & Eye.) ஆலோ பாதிக் வைத்திய முறையிலிருந்து அப்படியே ஆயுர்வேதம் பயிலுபவர்கள் படித்துத் தெரிந்து கொள்ளவேண்டியது. அப்படிச் செய்ய ஆயுர்வேதத்தின் குறைவு விலகிவிடும். ஆயுர்வேதம் வளர்ந்து விடும்" என்று.

இது சரியில்லை. இதனுல் ஆயுர்வேதமும் ஆலோ பாதிக் வைத்தியமும் ஒருவாறு கலந்து ஏதோ ஒருவித மாக வைத்தியத் தொழில் ஆபாஸமாய்* நடைபெறும். ஆயுர்வேத சாஸ்திரத்தினபிவிருத்தி ஏற்படாது. ஆயுர் வேதவைத்தியன் மாறுன ஸித்தாந்தங்களையுடைய வெளி வைத்தியமுறையிலிருந்து மாறின ஸித்தாந்தங்களை யுடைய மருந்து முறைகளை எவ்வளவு அதிகம் உபயோகிக் கிருனே; அவ்வளவு அதிகம் ஆயுர்வேதம் அதன் சாஸ்திரீ யத்துறையில் குறைவு பெற்றதென்றுதான் சொல்லவேண் டும். வளர்ந்ததாகச் சொல்ல்முடியாது. காரணம் அதன் ஸொந்த வேரிலிருந்து புஷ்டியைப் பெருததுதான். எல்லா அங்கங்களிலும் தனது சாஸ்திர மூலஸித்தாந்தப்பிரகா ரத்தை அநுஸரித்துச் செய்யப்படும் பூர்த்தியே ஆயுர்வேதத் திற்கு உண்மையான, இயற்கையான, மேல் மேலான

அபிவிருத்தியைப் பெருக்கும். ஆகையால், அதையடைவதற்கே தங்களுடைய முன்னேற்றத்திற்காக முயலும் ஆயுர்வேதபண்டிதர்கள் பாடுபட வேண்டும்.

இங்கு கவனிக்கவேண்டியதாவன :-பிஸிக்ஸ (Physics) கெமிஸ்ட்ரி (Chemistry) இஞ்ஜினீரிங் (Engineering) முதலிய மேல் நாட்டு விஞ்ஞானங்களாலாகிய நிதான சிகித்ஸைகளுக்கு உதவியளிக்கும் இயந்திரங்கள் முதலிய கருவிகள் ஆயுர்வேதத்தில் இந்த சமயம் இல்லாததால்தானே பெரும் பெருமையுடையதாயினும் அதன் கலை மங்குவதற்கு முக்கிய காரணம். ஆகவே இந்தக்குறையைப் பரிஹரிக்க, ஆலோபாதிக் வைத்தியத்திற்கும் மூலவிஞ்ஞானமாயுள்ள அந்த பிஸிக்ஸ் (Physics) கெமிஸ்ட்ரி (Chemistry) விஞ்ஞானங்களை அப்படியே ஆயுர்வேதத்தில் சேர்த்து விட்டால் பூர்ணமான உபயோகமேற்படும் என்று நினைக்கக்கூடாது ஏனெனில்— ஆயுர்வேதத்தினுடைய மூலதர்சனங்களை ஒட்டி அந்தப் புதிய கெமிஸ்ட்ரி (Chemistry) முதலிய விஞ்ஞானங்கள் ஸமன்வயம் செய்யப்படவில்லை. ஆயுர்வேதசாஸ்திரம் சிகித்ஸை விஷயத்தில் சுதந்திரமுள்ளதாயினும் பதார்த்தவித்யை முதலிய விஷயங்களில் சில மூலதர்சனங்களுக்கு வசமானதே ஆயுர்வேதத்திற்குப் பிரதான உதவியளிக்கும் மூலதர்சனங்கள் வைசேஷிகம், ஸாங்க்யம், யோகங்களாகும். இவைகளின் மேல் முளைத்து வளர்ந்த கிளைகளுடைய ஆயுர்வேதகல்பதருவின் வளர்ச்சிக்கு அமிருதப்பாலை வார்த்தாலும் மருந்துமலரின் மேல் வார்ப்பது நல்ல ஆரோக்கியப்பழங்களை யளிக்க வல்லதாகாது. தர்சனமூலங்களில் வார்த்தால் தான் சிறப்பாய் வளர்ந்து ஆரோக்கியப் பழங்களை நித்யமாயளிக்கும். ஆதலால் நவீனமான பிஸிக்ஸ் (Physics) கெமிஸ்ட்ரி (Chemistry) முதலிய விஞ்ஞானங்கள் ஆயுர்வேதத்திற்கு உதவியளிக்க வல்லதுகள், அவச்யம் எடுத்துக் கொள்ள வேண்டியவைகள் என்று இருந்தால் அவைகளைப் பரீக்ஷை செய்து ஸமன்வயப்படுத்தி ஆயுர்வேதத்தின் மூலதர்சனங்களில் ஒன்று சேர்க்க வேண்டியதே முதல்தரமான முக்கிய கார்யமாகும்.

இது முடியாத கார்யமல்ல. ஏனெனில், மேல்நாட்டாரால் வளர்க்கப்பட்ட நவீன பதார்த்தவித்யை முதலிய விஞ்ஞானங்கள் யாவும் கீழ் நாட்டின் வைசேஷிகம், ஸாங்கியம், யோகம முதலிய தர்சனங்களுடைய ஸூக்ஷ்மாம்சங்களின் ஸ்தூலகார்யங்களுககு உதவியாக மேற்கொண்ட வளர்ச்சியே யாகும். ஆதலால் ந்யாயவைசேஷிகஸாங்க்யயோக தர்சனங்களின் நிபுணர்கள் நவீனமான பதார்த்தவிதயா முதலிய விஞ்ஞானங்களைத் தஙகள் தர்சனங்களில் ஒன்று கூட்டிச் சேர்க்கப் பூர்த்தியான கருவிகளுடன் ஒருமிக்கப் பிரயதனம் செய்வார்களாகில் சீக்கிரத்தில் நன்ருக இக் கார்யம் முடியுமென்பது தான் நிச்சயம். ஆயுர்வேதத்தினுடைய மூலதர்சனங்களில் பிஸிகஸ் (Physics) கெமிஸ்ட்ரி (Chemistry) இஞ்சினீரிங் (Engineering) முதலிய நவீன விஞ்ஞானஙகளை நன்ருக ஸமன்வயம் செய்து பூராவாக ஒன்ருக்கினுல்தான், நவீன விஞ்ஞானங்களால் கண்டு பிடிக்கப்பட்ட நிதான சிகிதஸைகளுக்கு உதவியளிக்கும் இயந்திரம் முதலிய கருவிகள் இல்லாததால் தோன்றிய ஆயுர்வேதததின் குறைகள் உண்மையில் அகலும். புதிய விஞ்ஞானஙகளை மூலாதாரமாகப் பெற்ற ஆலோபாதிக் முதலிய வைத்திய சாஸ்திரங்களிலிருந்தும் ஆயுஸ்ஸுக்கு ஹிதத்தையளிக்கும் எல்லா அம்சங்களையும் ஆயுர்வேதரீதியாகப் பரீக்ஷை செய்து ஆயுர்வேதத்துடன் ஒன்று சேர்த்துக் கொள்ளும் சக்தியுண்டாகும். வேறு தினுஸாக ஆயுர்வேத மூலதர்சனங்களுடன் ஸமன்வயம் செய்து ஒன்று சேர்க்காமல் மேல்நாட்டு நவீன விஞ்ஞானங்களை ஆயுர்வேதத்தில் அப்படியே நுழைத்தால், அநுதினமும் வளரும் நவீன விஞ்ஞானங்களுக்கு ஆயுர்வேதம் நித்யமாய் அடிமையாயிருக்க வேண்டியதாகும். மேலும், தன் மூலதர்சனங்களிலிருந்து போஷணையற்றதால் செல்லரித்த வேரில் நிற்கும் மரம் போல ஆயுர்வேதம் க்ஷீணித்து விடும். ஆதலால் உத்ஸாஹமுள்ள ஆயுர்வேத பண்டிதர்களால் ஆயுர்வேதத்தின் எல்லா அங்கங்களிலும் உண்மையான, இயற்கையான மேன்மேல் வளர்ச்சியைக் கருதி

ஆயுர்வேதத்திற்குப் போஷகமான மூலதர்சனங்களுடைய அபிவிருத்தியிலும் சேர்ந்தாப்போல் பிரவிருத்தி செய்யப் படவேண்டியது அவச்யம்.

இவ்விஷயத்தில் சில தீர்க்கதர்சிகள் எண்ணுகின்றனர் :-" முற்காலத்தில் ஆயுர்வேதம் முதலிய ஸகல வித்யைகளும் விஷய இச்சைகளை முற்றிலும் துறந்து லோக க்ஷேமத்திற்காகவே தவம் புரியும் ஆப்தர்களுடைய தவத்தின் பலனுகப் புவியில் தோன்றியுள்ளன. அந்த வித்யைகளுடைய பரிபாலனமென்ன, பிரசாரமென்ன, அவ்வித்யைகளினுல் உண்டாகும் ஸுகங்களை மக்கள் அநுபவிக்கச் செய்ய வேண்டிய ஸௌகர்யங்களென்ன— இவைகளனைவற்றையும் அக்காலத்தில் பிரஜைகளுடைய ஹிதத்தையே புனிதவ்ரதமாய்க் கொண்டிருந்த அரசர்கள் விசேஷமாய்ச் செய்தார்கள். இக் காலத்தில் கலியின் பிரபாவத்தால் அதே நமது பாரததேசத்தில் வித்யைக்காகத் தவம்புரியும் அப்பேர்ப்பட்ட ஆப்தர்களுமில்லை. மேல் நாட்டு நாகரிகவிஷத்தினுல் அரசர்களுடைய ஹ்ருதயமும் மயங்கிப் போய் ரிஷிகளுடைய வித்யைகளைக் காப்பாற்றுவதிலோ, அபிவிருத்தி செய்வதிலோ பராமுகமாய் விட்டது. இந் நிலையில் ஆயுர்வேதம் முதலிய புராதன வித்யைகளுடைய மேல்மேல் அபிவிருத்தியைப்பற்றி ஆசைகொள்வதே முற்றிலும் வீணுகும்." என்று.

ஸத்யந்தானிது. ஆப்தர்கள் மறைந்து விட்டனர். அரசர்கள் இப்பொழுது முற்றிலும் அனுகூலமாகவில்லை. ஆயினும் ஆயுர்வேத பண்டிதர்கள் பேசாமலுட்கார்ந்து கொண்டிருக்கக் கூடாது. " विद्या वितर्को विज्ञानं स्मृतिस्तत्परता क्रिया । यस्यैते षड्गुणास्तस्य न साध्यमतिवर्तते । उत्थातव्यं जागृतव्यं योक्तव्यं भूतिकर्मसु । भविष्यतीत्येव मनः कृत्वा सततमव्यथैः । बली पुरुषकारो हि दैवमप्यतिवर्तते "— அதாவது "படித்தல், அதையே விசேஷமாய் பிரமாணங்களால் அலசிப் பார்த்தல், சாஸ்திரீயமான ஞானம், நினைவு, ஒரே ஊக்கம்,

அதை அநுஷ்டித்தல்— இந்த ஆறு குணங்கள் இருப்பின் அடையக்கூடிய விஷயம் அடையமுடியாமல் ஆவதில்லை. கிட்டுமோ கிட்டாதோவென்று ஸந்தேகப்பட்டுக் கொண்டு பிரவிருத்தி செய்யாமலிருக்கக் கூடாது. கிடைக்கவே செய்யும் என்று உறுதியுடன் நற்காரியங்களில் ஜாக்கிரதையாக எப்பொழுதும் ஈடுபட்டுக் கொண்டிருக்கவே வேண்டும். புருஷப்பிரயத்தனம் தீவ்ரமாய்ச் செய்தால் தெய்வம் பிரதிகூலமாயிருப்பினும் அதை ஜயித்து இஷ்ட ஸித்தியை அடையமுடியும்''— என்ற ஆப்தர்களுடைய உபதேசத்தில் திடநம்பிக்கையுடன் ஆயுர்வேத வித்வான்களும் அபிமானிகளும் ஒன்று சேர்ந்து 'स्वस्थातुरपरित्राणे नान्यापेक्षं स्वतःक्षमम् । आयुर्वेदं सवी-कर्तुं सर्वशक्त्या यतामहे'— அதாவது "உலகில் ஸ்வஸ்தர்கள், நோயாளிகள், எல்லோரையும் காப்பாற்றுவதில் ஆயுர்வேதம் இதராபேக்ஷையின்றி பூர்ணசக்தியுள்ளதாகத் திரும்பவும் ஆவதற்கு ஸர்வசக்தியுடன் பிரயத்தனம் பண்ணுவோம்" என்று ஹிருதயத்தில் பிரதிக்ஞை செய்து கொண்டு தீவ்ரமாய் தபஸ் செய்யத்தான் வேண்டும். இவ்விதம் விடாமுயற்சியுடன் செய்தால் அறிவுமயமான பகவான் திரும்பவும் பிரஸந்நமாகி வரமளிப்பார். நமது அரசர்களும் அநுகூலமாகி விடுவார்கள்.

ஆயுர்வேதத்தின் எல்லா அங்கங்களுடைய பூர்ண வளர்ச்சிக்காக ஆலோபாதிக் முதலிய வெளிவைத்திய முறைகளிலிருந்து தேவையான அம்சங்களை எடுத்துக் கொள்ளுவதற்கு முன்பு, பொதுவாயிருக்கும் எல்லா மூல தர்சனங்களையும் எவ்விதமாகவாவது ஸமந்வயம் செய்து ஒன்றாக ஆக்குவதில் கவனம் மிக அவச்யமென்பதில் ஸந்தேஹத்திற்கு இடமில்லை.

ஆனால், ஒரு முக்கியமான உண்மையை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது அவச்யம். அதாவது :— விரண சிகித்ஸை முதலியவைகளில் இப்பொழுது கர்மாப்பியாஸ ஸாமர்த்தியம் வசதியின்மையால் குறைந்திருந்தாலுங்கூட,

ஆயுர்வேதத்திற்கு உண்மையில் தேவையான அம்சங்கள் எவ்வளவு? பூர்த்தி செய்வது எவ்விதம்? என்று இப்போது நிச்சயித்தல் சிறிதும் முடியாதகார்யம். ஏனெனில், ஆயுர்வேத இலக்கியங்கள் முற்றிலும் எளிதில் கிடைக்கும்படி எங்குமே திருவுரை செய்யப்படவில்லை. புராதனமான ஆயுர்வேத இலக்கியங்களில் வெளியிடப்படாத நூல்கள் தஞ்சை ஸரஸ்வதி மஹால் முதலிய அநேக நூல் நிலையங்களில் கணக்கற்றவைகளாக ஆங்காங்கு காப்பாற்றப்படுகின்றன. இந்நூல்கள் யாவற்றையும் வெளியிட்டுப் பார்வையிட்ட பிறகல்லவோ ஆயுர்வேதத்தில் இல்லாத அம்சம் எது? பூர்த்தி செய்வதெவ்விதம்? என்ற அறிவு உண்டாக முடியும்.

ஆதலால், ஆயுர்வேத வளர்ச்சியின் பொருட்டு செய்ய வேண்டிய கார்யங்களில் வெளியிடப்படாத ஆயுர்வேத இலக்கிய நூல்களைச் சேகரித்தலும் வெளியிடுதலுந் தான் எல்லாவற்றிலும் முதலிடம் பெறுகிறது. தஞ்சை ஸரஸ்வதிமஹாலில் ஒன்றிலிருக்கும் கிரந்தரத்னங்களை முற்றிலும் பிரகாசஞ் செய்தாலும் ஆயுர்வேத இலக்கியத்தின் பஞ்சம் ஓரளவு பறந்து போகும். இதிலிருந்து குல்மசிகித்ஸை என்ற நூல் வெளியிடப்பட்டபிறகு, அறுப்பதைத் தவிர வழியில்லை யென்று தீர்மானிக்கப்பட்ட குன்மம் முதலிய நோய்கள் இந் நூலிற் கூறிய வழிப்படி உள்மருந்துப் பிரயோகத்திலேயே எளிதில் நிவிருத்தியாகிவிட்டன. நமது பிராசீனர்களுக்கு அற்புதமான மூலிகைகளுடைய பிரபாவ நுட்ப அறிவு மிகுந்திருந்ததால், ஆயுதப்பிரயோகமின்றியே விரணசிகித்ஸை செய்யும் ஸாமர்த்தியம் விசேஷமாயிருந்தபடியால் நம்மவர்களுக்கு ஆயுதப்பிரயோக ஸாமர்த்தியம் இந்நாளில் கிரமமாய்ச் சிறிது குன்றியுள்ளது என்ற வார்த்தை மிகைச் சொல்லாகாது. ஸரளமான முறையிருக்கும் பொழுது அநேகநாட்கள் இடைவிடாது கிரமப்பட்டு அப்யஸித்துக் கொண்டிருக்கவேண்டிய ஆயுதப்பிரயோக முறையை எந்தப் பண்டிதன் ஆதரிப்பான்? உலகப்பழமொழியும்

கூறுவதாவது :— 'अक्के चेन्मधु विन्देत किमर्थं पर्वतं व्रजेत् । इष्टस्यार्थस्य संसिद्धौ को विद्वान् यत्नमाचरेत्'— அதாவது 'தேன் ஸமீபத்திலேயே கிடைப்பின் அதைத் தேடிக்கொண்டு உச்சிமலைக்கு எதற்காகப் போகவேண்டும்? கார்யம் கைகூடின பின்பு சிந்தனையுள்ள எவன் ஆயாஸப்படுவான்". என்று.

ஸரஸ்வதிமஹாலில் வெகு நாட்களாகக் காப்பாற்றப் படும் ஆயுர்வேத நூல்களைப் பிரகாசம் செய்வதில் நூல் நிலயத்தின் நிர்வாஹகர்களும் பண்டிதப் பெரியார்களும் இப்பொழுது உத்ஸாஹத்துடன் ஈடுபட்டுள்ளதானது ஆயுர்வேத உலகத்தினரால் மிகவும் புகழத்தக்கது. இது காறும் வெளியிடப்பட்ட நூல்களைக் கண்டு களிப்புற்ற வைத்திய பண்டிதர்களனைவரும் மேல்கொண்டு புத்தகத்தைக் காணுவதில் தாமதத்தைக் கஷ்டத்துடன் தான் தாங்குவர். புததகங்களை வேகமாய் வெளியிடவேண்டுமென்று ஸரஸ்வதிமஹால் பண்டிதர்களையும் நிர்வாஹகர்களையும் கெஞ்சுகின்றனர். தஞ்சாவூரில் அந்நாளில் ஸ்ரீசரபேந்திரரால் ஆரம்பிக்கப்பட்ட ஸரஸ்வதிமஹாலுடன் விளங்கும் தந்வந்தரிமஹாலானது இன்று நமது ஜனாதிபதிகளால் புத்துயிரளிக்கப்பட்டதாகி, தென்பாரதத்தில் மத்தியில் விளங்கும் பெரும் ஆயுர்வேத ஆராய்ச்சிக்கழகமாக வளர்க்கப்பட்டு, மேல் மேல் சோபையுடன் அகிலமான பிணிகளையும் களையக்கூடியதாயும், சாஸ்திர தத்துவஞானாம்ருதத்தைப்பருக ஆசைப்படுபவர்களுக்கு ஆற்றலளிக்கவல்லதாயும் விளங்கவேண்டும் என்றும் மனதார வாழ்த்துகின்றனர்.

## மன்னிப்புக் கோருதலும் நன்றியறிவித்தலும்.

மெய்யன்புள்ள வாசகப் பெரியோர்களே !

ராஜம்ருகாங்கம் சிறிய யோக புஸ்தகம். இதனுடைய முகவுரையில் ஸம்பந்தாஸம்பந்தத்தை ஆலோசியாமல் வியாஸம் வெகு நீளமாய் எழுதித் தங்களுடைய

பொறுமையைத் தளரச் செய்துள்ள என்னைக் கருணை கூர்ந்து மன்னிக்கும்படிக்கு முதலில் வினயத்துடன் வேண்டுகின்றேன்.

தஞ்சை ஸரஸ்வதிமஹாலில் ராஜமிருகாங்கத்தின் கையெழுத்துப் பிரதி ஒன்றுதான் உள்ளது. அதுவும் எழுதினவரினறியாமையால் வழுக்கள் அதிகமாயுள்ளது. வேறு மாத்ருகைளெங்கும் கிடைக்கவில்லை. அச்சுக்கார்யத்தில் பாடங்களை என்னால் முடிந்தவரை கவனித்துச் சோதனம் செய்திருந்தாலுங்கூட எனதறியாமையால் ஏற்பட்டிருக்கும் மூலபாடத்தின் எழுத்துப் பிழைகள், தமிழ்மொழி பெயர்ப்பில் உள்ள விஷயக்குற்றங்கள், எழுத்துப் பிழைகள், எல்லாவற்றையுமே பண்டிதர்களினால் அன்புடன் சோதனை செய்துகொள்ளத்தக்கதென்று வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தமிழ் மொழி பெயர்ப்பில் திரவ்யங்களுடைய தமிழ் பெயர்களை நான் ஒரு சிறு ஆராய்ச்சி செய்து எனது மதப்படி எழுதியிருக்கிறேன். இதில் நான் தவறியிருக்கலாம். இவ்விஷயத்திலிருக்கும் வேறு வைத்தியருடைய அபிப்பிராயபேதத்தைப் பிழைத்திருத்தக் குறிப்பின் கீழ் தனியாக வெளியிட்டிருக்கிறேன். மருந்துகளுடைய சாப்பிடவேண்டிய அளவு, வேளை, அநுபானம், இவைகளை மூலபாடத்தில் சொல்லியுள்ளதை அப்படியே அநுஸரிக்காமல் இக்காலத்திற்கேற்றபடி ஊஹித்து பிரதி மருந்துக்கும் அடியில் எழுதியிருக்கிறேன். அநுபானங்கள், குணங்கள், செய்முறைகள், மூலத்தில் அவரால் செய்யப்பட்ட உரையிலில்லாத விஷயங்களும் ஒவ்வொரு மருந்திற்கும் அடியில் தமிழில் மட்டும் தெரிந்த வரையில் தெளிவாய் எழுதியுள்ளேன். இவைகளிலிருக்கும்குற்றங் குறைவுகளையும் மன்னித்தருளும்படிக்கு பண்டிதர்களை வேண்டுகிறேன்.

இந்நூலைப் பரிசோதித்து தமிழ்மொழி பெயர்ப்புடன் வெளியிடுவதன் மூலம் ஆயுர்வேதத்திற்கு ஒரு சிறிய

ஸேவை புரிய எனக்கு ஸந்தர்ப்பமளித்ததற்காக சென்னை அரசாங்கக் கையெழுத்துப் பிரதி நூல் சேகரக் கார்யாலயத்தின் அதிபர் ஸ்ரீ. T. சந்திரசேகர அய்யரவர்கட்கும், தஞ்சாவூர் ஸரஸ்வதி மகால் கௌரவக் கார்யதர்சி ஸ்ரீ. S. கோபாலய்யரவர்கட்கும் என் மனமார்ந்த தந்யவாதங்களை ஸமர்ப்பிக்கின்றேன.

எனது நண்பர் ஆயுர்வேதசிரோமணி ஸ்ரீ. S. V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ அவர்கள் இப்புத்தகத்தை வெளியிடுவதில் அநேக கார்யங்களில் அடிக்கடி எனக்கு உதவியளித்துள்ளார். ஸ்ரீரங்கத்திலிருக்கும் ஸ்ரீவிலாஸம் அச்சுக்கூடத்தின் ஸ்வாமீ பண்டித ஸ்ரீ ஸௌந்தரராஜஅய்யங்கார் அவர்களால் அச்சில் ப்ரமாணபத்திரங்களுடைய பரிசோதனைக் கார்யக்கஷ்டம் எனக்கு மிகவும் குறைக்கப்பட்டது. தஞ்சைவாஸீ, வைத்தியர் ஸ்ரீ. G. ஸ்ரீநிவாஸஅய்யங்கார் B. A. அவர்கள் திரவ்யங்களுடைய தமிழ்ப் பெயர்களில் தனது அபிப்பிராய பேதங்களை அன்பு ஒற்றுமைகளுடன் தெரிவித்து உபகரித்தார். நட்பினால் உபகரித்துள்ள இந்த என் நண்பர்களுக்கு உள்ளன்புடன் நன்றி செலுத்துகின்றேன்.

இப்படிக்கு,
வைத்தியர்களுடைய அநுக்கிரஹத்தை வேண்டும்

திருச்சிராப்பள்ளி. கலி 5052,
விக்ருதி ஐப்பசி 4 விஜயதசமி
(20—10—1950.)

வா. பா. நடராஜசாஸ்த்ரீ.

சிவார்ப்பணமஸ்து.



# ॥ शुद्धिपत्रिका ॥

| पृष्ठं | पङ्क्ति. | अशुद्धं | शुद्धं |
|---|---|---|---|
| | | **उपोद्घातः ॥** | |
| ४ | २१ | मनुद्घाटयैव | मनुद्घाद्यैव |
| १२ | ५ | द्राविड्य | द्राविड्या |
| १३ | ५ | द्रढीयान् | द्रढीयान् |
| ,, | ७ | द्रढिष्ठः | द्रढिष्ठः |
| १६ | १२ | प्रेंक्षा | प्रेक्षा |
| ,, | २१ | आयुवेद | आयुर्वेद |
| ,, | २८ | दा निक | दार्शनिक |
| ,, | २९ | तमत्वमेव | तमव्यमेव |
| | | **पादटिप्पणी ॥** | |
| २२ | १ | प्रतिरूणक | प्रतिरूपक |
| २२ | २ | विलेखनेन | विलिख्य |
| २३ | ५ | ग्रन्थकर्तः | ग्रन्थकर्तुः |
| २५ | १० | रसभिधानेषु | रसाभिधानेषु |
| ४६ | ८ | ग्रन्थारन्तराणां | ग्रन्थान्तराणां |
| ,, | ९ | कुसुमा–का | कुसुमाकर |
| ८९ | ४ | अवद्धः सञ्जातः | अवद्धं सञ्जातं |
| ९९ | २ | मुक्तन् | मुक्तम् |
| १३१ | १ | योमरत्नाकरीयः | योगरत्नाकरीयः |



# திரவ்ய ஸ்வரூபத்தில் அபிப்பிராய பேதம்.

(1) **प्रियङ्गु:**— பக்கம் 60 மருந்து எண் 6 முதலிய இடங்களில் கௌளா என்று உத்தரப்பிரதேசத்தில் விளையும் சரக்கு என்று என்னுடைய கொள்கை. ஞாழல் பூவு என்று கேரளத்தில் கிடைக்கும் வஸ்து என்று சிலர்.

(2) **मिशि:**— (பல இடங்களில் பிரயோகம்) சோம்பு என்று எனது எண்ணம். சதகுப்பை யென்று சிலர்.

(3) **विषाणिका**— (ப. 86. யோ. 37) विपाणिका என்ற பதம் क्षीरकाकोली யின் பர்யாயமாக வைத்யக சப்தஸிந்து முதலிய நிகண்டுகளில் காண்கின்றது. ஆனால் विषाणिका— குருங்கண்ணி யென்று சிலர்.

(4) **तगरम्–तगरपादुका** - அலாருன் என்று எனது அபிப்பிராயம். தகரவிதை யென்று சிலர்.

(5) **मूर्वा**— மருள் என்று எனது எண்ணம். பெருங்குரும்பை என்று சிலர்.

(6) **अलर्कम्**— (ப. 142. யோ. 118) अलर्क பதம் வெள்ளெருக்கில்தான் பிரஸித்தம். ஸரஸ்வதீமஹால் மூலிகாநுக்கிரமணிகாவில் மட்டும் अलर्कम्— தூதுவளை யென்று இருக்கிறது.

# குறிப்பு.

| பக்கம் | என் | யோகப் பெயர் | விஷயம் |
|---|---|---|---|
| 57 | 3 | கர்ஜூராதி சூர்ணம் | उर्वारु=சுரைக்காய்க்கு பதில் வெள்ளரிககாய். |
| 68 | 16 | பித்த சூர்ணம் | லவங்கப்பத்திரிக்கு அடுத்தபடி நெல்லிவற்றல் சேர்க்கவும் |
| ” | ” | ” ” | வெண் கோஷ்டததிற்கு அடுதத படி கோரைக்கிழங்கு சேர்க்கவும். |
| ” | 17 | தவக்ஷீரீ சூர்ணம் | நீலோத்பலக் கிழங்கிற்குமுன்பு ஆமபல்கிழஙகு சேர்ககவும். |
| 72 | 22 | மஹா ஏலாதி சூர்ணம் | शैलेयं=கடற்பாசியைப் பார்க்கிலும் சிலாஜது என்று பொருள் கூறுவது அதிகப் பொருததம |
| 74 | 24 | மஹாத்ராக்ஷாதி சூர்ணம் | कौश என்பதறகு குசதர்ப்ப மூலம் என்று பொருள் கூறததகும |
| 78 | 29 | பஞ்சபாண சூர்ணம் | கோஜிஹ்வா— என்பதற்குத் தமிழ்— சாறுக்கிரை |
| 85 | 37 | ஹஸ்திகர்ணி சூர்ணம் | ईश्वरी=கீரப்பாலை-பெருமருந்து. |
| 90 | 41 | லவங்காதி சூர்ணம் | ஏலம் 4, மிளகு 8, சர்க்கரை 127க்குப் பதிலாக ஏலம் 3, மிளகு 10, சர்ககரை 128 சேர்ககவும. |
| 91 | 43 | அஷ்டாதச விதகுஷ்ட சூர்ணம் | கீரப்பாலையை பெருமருந்து என்றும், புடபத்திரம் சேர்தது மொததம் 4 சரக்குகளாகவும் கொள்ளவும். |

| பக்கம் | எண் | யோகப் பெயர் | விஷயம் |
|---|---|---|---|
| 92 | 44 | ப்லீஹாரோக சூர்ணம் | கடலுப்பு என்ற பதத்தைவிலக்கவும். मयूरक्षार: என்ற பதத்திற்கு நாயுருவிக்ஷாரம் என்று பொருள் கொள்ளவும். |
| ,, | 45 | பஞ்சாக்னி சூர்ணம் | கடுகு, பெருங்காயம் இரண்டு தரம் எழுதப்பட்டிருப்பதை ஒரு தரமாகவும் மொத்த சரக்கு 27 அல்ல 25ஆகவும் படிக்கவும். |
| 98 | 51 | சித்ரகாதி சூர்ணம் | ஸர்ஜிகாக்ஷாரத்துடன் யவக்ஷாரமும் சேர்க்கவும். |
| 100 | 54 | ஸாரஸ்வத சூர்ணம் | அதிமதுரத்திற்கு முன் வசம்பு சேர்க்கவும். மொத்த சரக்கு 9-ஐ 10 ஆக்கவும். |
| 102 | 57 | வ்யோஷாதி சூர்ணம் | ஜீரகத்திற்கு முன்பு கருவேப்பம் பருப்பு சேர்க்கவும். |
| 114 | 73 | ஆருஷ்யாதி சூர்ணம் | மரமஞ்சளுடன் மஞ்சள் சேர்க்கவும். |
| 126 | 93 | வாதகஜ கிருதம் | புஷ்கரமூலத்திற்கு முன்பு கடுக்காய் சேர்த்து, கல்க சரக்கு 3-ஐ 4 ஆக்கவும். |
| 141 | 117 | ஆந்த்ரீ ஜ சூர்ணம் | हायतोयं-रंभातोयं என்று மூலத்தைத் திருத்திக்கொண்டு, வாழைக்கிழங்குச்சாறு என்றும் பாவனைத் திரவங்கள் 8-ஐ 9 எனவும் திருத்தவும். |
| 144 | 121 | மாலினீமகரத்வஜசூர்ணம் | ஓமம் நீக்கி ஏலம் சேர்க்கவும் |
| 152 | 126 | அசுவகந்தாதி சூர்ணம் | அதிமதுரத்திற்கு முன்பு மஞ்சிஷ்டை சேர்க்கவும், |

॥ श्रीः ॥

# ॥ योग सूचिका ॥

# யோக அட்டவணை

॥ श्रीः ॥

॥ श्रीगणेशाय नमः ॥

# ॥ वैद्यकग्रन्थो राजमृगाङ्कः ॥

## राजमृगाङ्करसः । *

एकद्वित्रिचतुष्कपञ्चषड्भिर्न(र्स्स)मञ्चमष्टौ नवं
वज्रादिक्रमवृद्धिहेमभसितं षड्भिश्च भस्मं रसम् ।
तार कान्तकशुल्बनागलोहगरुडोद्गारञ्च वैक्रान्तक-
मेकैकक्रमवृद्धिमभ्रकरजः सप्तं तथा माक्षिकम् ॥ १ ॥

……..[1] भस्म दशाङ्कं सकलपषड्गन्धकेन क्रमं
शुद्धं टङ्कणक सविंशतिसमं सर्वं शुभं मङ्गलम् ।

## ராஜமிருகாங்க ரஸம.*

| | பங்கு | | பங்கு |
|---|---|---|---|
| வைர பஸமம் | 1 | மரகத (பச்சை) பஸ்மம் | 9 |
| தஙக பஸ்மம் | 2 | வைக்ராந்த பஸ்மம் | 10 |
| ரஸ பஸமம் | 3 | அப்ரக பஸ்மம் | 7 |
| வெளளி பஸமம் | 4 | ஸவர்ணமாக்ஷிக பஸ்மம் | 7 |
| காந்த பஸமம் | 5 | முத்து பஸமம் | 10 |
| தாம்ர பஸமம் | 6 | கந்தகம் | 6 |
| காரீய பஸமம் | 7 | பொரித்த வெஙகாரம் | 20 |
| லோஹபஸ்மம் | 8 | | |

संपादकटिप्पणी :—

रसशास्त्राकरग्रन्थेषु मृगाङ्करस—राजमृगाङ्करस–महाराजमृगाङ्करस–रत्नगर्भमहाराजमृगाङ्करसेत्यादिभिः संज्ञाभिर्नानाप्रकारा मृगाङ्करसाः प्रोक्ताः।

1 शून्यदेशे 'मुक्ता' इति स्यात् ।

*ஸமஸக்ருத மூலம் தெளிவாயில்லை. தமிழ் மொழிபெயர்ப்பு முடிநத வரையில் ஊகிதது செய்யப்பட்டிருக்கிறது. ஆதலால் இந்த யோகததில் திரவ்யஙகளுடைய அளவுகள் ஒன்றும் தீர்மானமாக சொல்ல முடியவில்லை.

खल्वे संस्थितकं सुलक्षणकृतं[1] जम्बीरके मर्दितं
तद्गोलं लवणेन पूरितमिदं मध्याग्निना पाचयेत् ॥ २ ॥

*எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழரஸத்தில் அரைத்து உருண்டையாக்கி உப்பின் நடுவிலிட்டு மத்யாக்னியில்*

---

अस्मिन् सन्दर्भे मुद्रितामुद्रितरसग्रन्थेषु यथाशक्त्यन्वेषणेन मृगाङ्करसस्य मिथो भिन्नाः पञ्चचत्वारिंशत् (45) योगा उपदिष्टा उपलभ्यन्ते। अनेन ग्रन्थकारेण संकलितौ राजमृगाङ्क—महाराजमृगाङ्करसौ तु ततस्ततो रसग्रन्थेषु प्रोक्तेभ्यो मृगाङ्करसेभ्यो भिन्नावेव दृश्येते। अनेनोत्तरत्र वर्णितानां पूर्णचन्द्रोदयादीनां रसयोगानां समालोकने, तेषु रसयोगेषु नैकोपि एतद्ग्रन्थकारेण स्वतन्त्रतया विरचितः, किन्तु ग्रन्थान्तरेभ्यो मूलयोगान् सङ्कलय्य, क्वचित् स्वविरचितव्याख्यया सह विलिख्य रक्षित इति निश्चेतव्यो भवति। ग्रन्थारम्भे लिखिताविमौ राजमृगाङ्क महाराजमृगाङ्करसौ अनेन कुतः संकलिताविति न मया ज्ञातुं पार्यते, उपलभ्यमानग्रन्थोक्तेषु मृगाङ्करसेष्वन्यतमेनाप्येतयोः पूर्णतया संवादाभावात्। अमू न व्याख्यातौ स्वयं ग्रन्थकृता।

एवमिह संभाव्यते— वैद्योऽसौ स्वगुरुपरंपराप्राप्तौ स्वानुभूतौ च द्वौ मृगाङ्करसयोगौ स्वकीयभेषजयोगमञ्जूषायां सङ्कलय्य विलिखन्, तत्र च प्रथमे योगे मङ्गलशब्दघटनामाशंसमानः स्वकपोलेन परिवर्त्तितपदानि पद्यानि रचयामास। वैद्यस्यास्य पद्यरचनायां पर्याप्तपाटवाभावं पद्यशैली प्रदर्शयत्येव। अथ चोत्तरोत्तरमवैद्यकानां प्रतिरूपलेखकानां (Copyist) प्रमादान्नानाशब्ददोषाः प्रविष्टाः स्युरिति।

मृगाङ्कद्वयेऽपि शब्ददोषाणां शोधनप्रवृत्तिर्मूलमेव विपर्यासयेदिति योगद्वयमपि यथोपलब्धमेव प्रकाशितम्। अल्पतरप्रथममृगाङ्कापेक्षया बृहत्तर द्वितीय मृगाङ्करसे शब्ददोषा अल्पीयांसः। अतोऽर्थावबोधश्च तस्य स्पष्टतरः। प्रथम मृगाङ्करसेऽपि, यद्यपि अर्थनिष्कर्षो दुर्घटस्तथाऽपि भूयो मृगाङ्करसपरिशीलननिष्णातधिया कथञ्चिदर्थं संभाव्य कल्पिता द्राविडी व्याख्या।

---

1. कृतं जम्बीरकैर्मर्दितम् इति स्यात्।

यामाष्टौ च समं धरे च भवतां माङ्गल्यपूर्वं भिषक्-
च्छ्रीमद्राजमृगाङ्कनामकरसः कर्पूरकस्तूरिका ।
गन्धं[1] कुंकुम हेम[2]केसरतवक्षीरी च जाजीफलो-
शीरं पद्मकपत्रकुष्ठ [3]विललवयापड्गन्ध[4] समिश्रितम् ॥ ३ ॥

पश्चाच्छुद्धरसेन्द्रकं च सुदिने सद्वल्लयङ्गं[5] श्रित-
माज्यं मागधित्र्योषसैन्धवयुतं प्रत्यूषणैः(के)(?) सेवितम् ।
(तं) पथ्यं गव्यघृत च दुग्धदधिभि. क्षीरान्नशाल्योदनं
शाकं तण्डुलभिल्लिवास्तुकमि. . कोशातकी वल्लकी ॥ ४ ॥

मत्स्याक्षी च पटोलशिग्रुफलजे धात्रीफलं गोधुम
मुग्धं(द्ग) कोमलबीजपूरबृहती बिंबी कुलत्थ रसम् ।
स्वर्ण रौप्यकसुकान्तपात्रकुरुत प्राच्यं मुखं भुक्तये
द्राक्षादाडिम इक्षुखण्ड कदली [6]स्त्रीनारीकेलोद्भवे ॥ ५ ॥

8 யாமம் எரிக்கவும். ஆறினவுடன் எடுத்து அத்துடன் பச்சைக் கர்ப்பூரம் கஸ்தூரி, சந்தனம், குங்குமப்பூ, சிறுநாகப்பூ, மூஙகிலுப்பு, ஜாதிக்காய், விளாமிச்சம வேர், பதிமுகம், பச்சிலே, கோஷ்டம், கஞ்சா, வசம்பு இவைகளுடன் சேர்த்து 4 குந்துமணியளவு மாத்திரை உருட்டி நெய், திப்பிலிப் பொடி அல்லது திருகடு சூர்ணம்—இவைகள் அனுபானத்துடன் காலேயில் சாப்பிடவும். பசுவின் நெய்—பால் தயிர், பால் சாதம், பசளே, வாஸதுக் கீரை, பீர்க்கு, பொன்னுங்கண்ணி, புடல், முருங்கை, நெல்லிக்கனி, கோதுமை, பயறு, துறிஞ்சி, முள்ளுக்கத்திரி, கோவை, கொள்ளு இவை பத்தியம். தங்கம வெள்ளி இவைகளாலான பாத்திரத்தில் கிழக்கு முகமாக உட்கார்ந்து புஜிக்கவும் திராக்ஷை, மாதுளே, கரும்பு-வாழை, பில்வம், தேங்காய் இக்கனிகள் நல்

---

1. चन्दनकाष्ठचूर्णम् ।　　2. नागकेसरम् ।　　3. विजया इति स्यात् ।　　4. षड्ग्रन्थेति स्यात् । वचा ।　　5. तं वल्लयुग्ममिति स्यात् ।
6. श्रीनारिकेलोद्भवम् इति स्यात् । श्रीः— बिल्वफलरसः ।

कासश्वासक्षयाग्निमान्द्यग्रहणीपाण्डुप्रमेहार्शसां
सर्वव्याधिनिवारणं हितकरं श्रीपूज्यपादोदितम् ॥

इति राजमृगाङ्कोऽयं रोगजातस्य कथ्यते ।
अनुपानमिदं योग्यं तत्तद्रोगस्य नाशनम् ॥ ६ ॥

—⊕—

## २. अथ महाराजमृगाङ्करसः ।

रसभस्म चाष्टभागं सुवर्णं दशभागकम् ।
रजतं नवभागेन वैक्रान्तद्वादशानि च ॥ १ ॥

वज्रमेकादशं भागं ताम्र सप्तस्य भागिकम् ।
रत्न[1](?) भागचतुर्थं स्यात् दश पञ्चेपु(?) व्योमकम् ॥ २ ॥

कान्तं लोहं कान्तरीती कर्पूर कदलीफलम् । (?)
गोमेधिक पुष्परागं राजावर्त प्रवालकम् ॥ ३ ॥

*ஸவை. காஸம், சுவாஸம், க்ஷயம, அக்னிமாந்தியம், கிரகணி, பாண்டு, பிரமேகம, அர்சஸ முதலிய வியாதிகளில் தகுநத அனு பானததுடன உட்கொளள மிகுந்த பலனளிக்கும.*

## 2 மஹாராஜ மிருகாஙக ரஸம.*

*ரஸபஸ்மம் 8, தங்க பஸமம் 10, வெளளி பஸ்மம் 9, வை க்ராந்த பஸ்மம் 12, வைரபஸ்மம 11, தாமர பஸமம் 7, ரத்னம் (?) 4, அப்ரக பஸ்மம 15 காந்த பஸமம், லோஹபஸமம் காந்த பஸ்மம் (?) பித்தளை பஸமம், பச்சைக்கறபூரம், வாழைபபழம(?) கோமேதக பஸ்மம், ராஜாவர்த பஸமம், பவழ பஸ்மம், சுகபிஞ்*

---

1. रत्नसामान्यवाची रत्नशब्दो रत्नविशेषवाच्यपि स्यात् मृगादि शब्दवत् । किं तु तत् किमिति न बुद्ध्यते निघण्टुभ्यः ।

*முதலாவது ராஜ மிருகாங்க ரஸததைப பார்க்கிலும் இரண்டா வது மஹாராஜ மிருகாங்க ரஸத்தினுடைய ஸம்ஸ்கிருத மூலததில் பிழைகள் குறைவு. திரவ்யங்களுடைய அளவுகளில் ஸம்சயமில்லை. மற்ற இடங்களில் இருக்கும் ராஜ மிருகாங்கரஸங்களையும், செய் முறைகளில் கவனித்துவிட்டு மருந்து செய்வது உபகாரமாயிருக்கும்.*

